**திருநெல்வேலி கம்பபாத சேகரன் இ. சங்கரன் இயற்றிய**

**திருநெல்வேலித் தல விநாயகர்**

**பொள்ளாப் பிள்ளையார் உயிர் வருக்க அந்தாதி மாலை**

**அ**வனி எழுத்தின் ஒலிவரியா அமைந்த சுழியில் உறைவோனே
புவனம் பெற்றாள் அருமகவே பூதி அணிந்தான் நற்புதல்வ
துவளும் மனத்தின் நடுக்கமதை தீர்க்க உன்தாள் பணிந்தனனே
உவந்து எமக்கு அருள்செய்வாய் பொள்ளா **ஆ**னைமுகா. 1.

**ஆ**தி மூல பெருமானே ஆறு அளித்த எம்மானே
பாதி இருவர் மகிழ்செல்வ பனிசூழ் இமையம் முன் அமர்வோய்
மாது இருவர் மகிழ்நாதா மறுகு வாழ்வை சீர்செய்து
நீதி வழியில் நான் நிற்க அருள்வாய் பொள்ளா **இ**பமுகனே. 2.

**இ**றைவன் இறைவி களிறுபிடி எனவாகி கலந்து தந்தபிள்ளாய்
பிறையும் அறுகு நதிஅரவு இதழி அணிந்த திருமுடியாய்
குறைவில் மதியும் நிறைவாழ்வும் குணமும் அருள உனைத்தொழுதேன்
நிறைந்த அருளை அடியேற்கு பொள்ளா களிறே **ஈ**குவையே. 3.

**ஈ**டில் செல்வம் நற்கல்வி நோயில் உடலும் பெரும்புகழும்
கேடில் வாழ்வும் நல்உறவும் கொள்கை உடையார் நல்தொடர்பும்
கோடு ஒன்று ஒளிர்முகனே பொள்ளாப் பிள்ளையாரே உன்
ஏடு மலர்தாள் தொழுதனனே கடைக்கண் பார்த்து **உ**வந்தருளே. 4.

**உ**லகை சுற்றி வந்திடவே உம்பி மயிலில் புறப்பிடவே
உலகம் தாயும் தந்தையுமே என்று உலகு உணர்ந்திடவே
களதப் பரியன் நீஅவரை சுற்றி கனியைப் பெற்றவனே
சுளவு செவிகொள் பொள்ளாத களிறே **ஊ**க்கம் தந்தருளே. 5.

**ஊ**ரின் சந்தி நற்சதுக்கம் உவந்து அமரும் பூதநாதா
தேரின் அச்சு முறித்தவனே தெய்வ முதலே எம்தேவே
காரின் வண்ணக் குழலியர்தம் காம சுழியில் படாதுஎமை
கூரார் கோட்டு பொள்ளாத களிறே **எ**ன்னை புரந்தருளே. 6.

**எ**ன்றும் உன்னை அன்றிஒரு தெய்வம் பணிந்து போற்றுகிலேன்
நன்றும் தீதும் அறியேன்நான் நல்ல நெறியை காட்டிடுவாய்
அன்று முனிசொல் காதையினை அசல ஏட்டில் வரைந்தவனே
உன்னை போற்றி தொழுவார்கள் உலகில் **ஏ**ற்றம் கொள்வாரே. 7.

**ஏ**ற்றின் கொடியோன் எந்தைபிரான் ஏற்ற குருவாம் குமரவேளை
சாற்றும் குறமான் வள்ளியவள் குழைந்து தழுவ முழுஉருவத்
தோற்றம் காட்டி உதவியவா நாளும் உன்தாள் நினைந்திடவே
போற்றும் நெல்லை பொள்ளாத **ஐ**ங்கை நாதா அருள்தருவாய். 8.

**ஐ**ந்து பூத வடிவாகி அவனி நிறைந்த பரம்பொருளே
இந்து சூடும் இறைவனுடன் இறைவி வடிவில் விளங்கியவா
சிந்து மலர்சூழ் நெல்வேலி சிறக்க வாழும் பொள்ளாத
தந்தி முகனே அடியேனின் பந்த வினைகள் **ஒ**ழித்தருள்வாய். 9.

**ஒ**ன்றும் அறியா அறிவிலியை உயர்ந்த நெறியின் வழிகாட்டி
என்றும் அதனை விடாதிருக்க எனக்கு நீயே அருள்செய்வாய்
குன்று எடுத்தான் மருகோனே கனியும் தொழும்பர் நற்றுணையே
மன்றில் ஒன்றாம் நெல்லைநகர் பொள்ளா களிறே **ஓ**ங்காரா. 10.

**ஓ**யா பிறப்பில் உழன்றாலும் உன்னை மறவா வரம்தருவாய்
ஆயன் கண்ட வேணுவன பொள்ளா களிறே உன்அருளால்
தாயாய் நீதி உரைத்தவளாம் வேலன் அருளை பெற்றவளாம்
நேயம் நிறைந்த தமிழ்ச்செல்வி நிகரில் கீர்த்தி **ஔ**வையாரே. 11.

**ஔ**ளவிய மனத்தர் அறியாத அருமைப் பொருளே அருமருந்தே
கௌவை பௌவம் கடந்திடவே உன்தாள் புனையை தந்தருள்வாய்
மௌவல் நகையார் சித்திபுத்தி கணவா பொள்ளா விநாயகனே
மௌன முதலே அடியெனைஉன் **அ**டிகீழ் வைத்து காத்தருளே. 12.

முற்றும்